REGD. No. M. 6311

PHONE No.: 55630

தனி இதழ்
ஒரு அணு
இலங்கையில் 10 சதம்

மலர் 1] [இதழ் 308

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர்..அண்ணுதுரை

"THE NAM NADU" A TAMIL DAILY: THE OFFICIAL ORGAN OF: THE D.P.F

சந்தா விபரம்
உள்நாடு (இலங்கை உட்பட)
ஆண்டு ரூ. 24—0—0
6 மாதம் ரூ. 12—0—0
3 மாதம் ரூ. 6—0—0
வெளிநாடு:
ஆண்டு ரூ. 30—0—0
6 மாதம் ரூ. 15—0—0
3 மாதம் ரூ. 7—8—0

சென்னை: வைகாசி 27உ புதன் (9—6—54) ★ ★ ★ வெளியூர்: வைகாசி 28உ வியாழன் (10—6—54)

# அரவம் போல் தலை நீட்டுகிருர்!

## மாண்ட திட்டத்துக்கு மாரடிப்பு! | ஆச்சாரியாரின் அறிக்கை அம்பு!

—(:)—

## காமராஜரிடம் கைவரிசை காட்டுவாரா?

★

ஆச்சாரியார், புற்றாவம் மெள்ளத் தலையை வெளியே நீட்டுவதுபோல, இப்போது, தமது காரியத்தைத் துவக்குகிருர் என்று தெரிய வருகிறது.

தம்மை 'வீட்டுக்கு' அனுப்பினுல் நாடே சீறி எழும்; காங்கிரசே பிளவுபட்டுப் போகும்; நேரு பண்டிதரே நடுநடுங்கிப் போவார்; திக்கு நோக்கித் தெண்டனிட்டு தம்மை அழைத்துச் சென்று பதவியில் மீண்டும் உட்கார வைத்துச் 'சோடசோபசாரம்' செய்வார்கள் என்று எண்ணினுர்—ஏமாந்தார்.

நாடே, மகிழ்ச்சி அடைந்தது—'மகான்' கோலம் போட்டுக் கொண்டு மக்களைக் கொடுமை செய்துவந்த இந்த மகானுபாவர், பதவியை விட்டு விலகியது கண்டு!

புதிய மந்திரி சபை எளிதில் அமையாது—அதை அமைக்கும் போதே எதிர்ப்பும், ஆபத்தும் கிளம்பும் என்று எதிர்பார்த்தார்—அதுவும் நடைபெறவில்லை.

இனி நான் 'ராமாயணம்' சொல்லப்போகிறேன் என்ருர்—'கூடாது, கூடாது; பதவியில் இல்லாவிட்டாலும் அரசியல் பிரச்னைகளைப் பற்றிப் பேசித் தெளிவு தரவேண்டும்; புதிய மந்திரி சபைக்கு யோசனைகள் கூறிக்கொண்டிருக்க வேண்டும்,' என்று அனைவரும் கெஞ்சிக் கூத்தாடுவோர்கள்—என்ற நினைப்பில்! ஒருவரும் சட்டை செய்ததாகத் தெரியவில்லை. அவருக்குத் தகுந்த வேலை 'சக்ரவர்த்தி திருமகன்' எழுதுவதுதான்; செய்யட்டும் என்று இருந்துவிட்டனர்.

டில்லி வட்டாரம், ஒரு 'மேதை'யை இழக்கச் சம்மதிக்குமா; எப்படியும், நேரு பண்டிதர் அந்தமான் தருவார் என்று விமானக்கூடம் சென்று சென்று பண்டிதரிடம் பேசிப் பார்த்தார்—பலன் இல்லை.

இவ்வளவு ஏமாற்றங்கள் அவருடைய மனதை உடைத்து விட்டிருக்கிறது.

காமராஜர், புதிய மந்திரி சபை அமைத்ததோடு நிற்கவில்லை—ஆச்சாரியாரின் கல்வித் திட்டத்தையும் ஒழித்துக் கட்டினுர்.

நாடு, விழா கொண்டாடிற்று; 'ஜனநாயகம் வென்றது' என்று மக்கள் மகிழ்ந்தனர்; காமராஜருக்கும் பல இடங்களிலிருந்தும் பாராட்டுதல் கிடைத்தது.

ஆச்சாரியாரின் கல்வித் திட்டம் ஒழிந்தது குறித்து, ஒரு சொட்டுக் கண்ணீர் விடவும் யாரும் முன்வரவில்லை. இது கண்டு ஆச்சாரியாருக்குத் தாங்க முடியாத துக்கம்—கோபம்.

இவ்வளவு விரைவில் தன்னை மக்கள், செல்லாக் காசு ஆக்கிவிடுவார்கள் என்று அவர் எதிர்பார்க்கவில்லை.

எனவே, தன் கையே தனக்கு உதவி என்ற பழமொழிப்படி, ஆச்சாரியார், தாமாகவே தமக்கு 'பாராக்கு' கூறிக் கொள்ள முன்வந்து விட்டார்.

இடையில், 'தொண்டரடிப் பொடிகள்' தூண்டிவிடப்பட்டனர்; கல்லும் சொல்லும், மண்ணும் மாச்சரியமும் வீசினர்; மக்கள் மன்னித்துவிட்டனர்.

இனித் தாமே 'அம்பலம்' ஏறியாக வேண்டுமென்று தீர்மானித்த ஆச்சாரியார், இன்று 'இந்து' இதழில், ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிருர்.

அருமையான திட்டம்! அற்புதமான திட்டம்! எல்லோரையும் படிக்கவைக்கும் திட்டம்! உத்தியோகத்துக்கு அலையும் போக்கை ஒழித்துக் கட்டும் திட்டம்! இதை ஒழித்துக் கட்டிவிட்டார்களே! ஐயகோ! அந்தோ!—என்றெல்லாம் அங்கலாய்த்துக் கொண்டிருக்கிருர், அறிக்கையில்!

அரசியலைப் பிழைப்பாக்கிக் கொண்டவர்கள், வேண்டுமென்றே எதிர்ப்பை மூட்டிவிட்டனர் என்று பேசுகிருர்—அரசியலைப் பிழைப்பாக்கிக் கொண்டு கவர்னர்-ஜெனரல் வரையில் அனுபவித்து, விரட்டப்படுவதற்கு முன்புவரை 'இரட்டைச் சம்பளம்' வாங்கி வந்த இந்த வேதாந்த சிரோமணி.

மாண்டுபோன திட்டத்துக்கு இவ்வளவு நாள் கழித்து, இவர் 'மாரடிப்பு' நடத்துவதன் மர்மம் என்ன?

திட்டத்தை 'ரத்து' செய்ததும்—நாடு சீறும்—என்று பைத்தியக்காரத்தனமாக அவர் எதிர்பார்த்தார் நடைபெற்றதோ வெற்றி விழாக்கள்! பாராட்டுக் கூட்டங்கள்! காமராஜர் வாழ்க — என்ற முழக்கங்கள்!

எப்படி இருக்கும் மனம்? பரிதாபம்! 'சரி, 'இந்து' இருக்கப் பயமேன்"—என்று கிளம்புகிருர் அறிக்கை அம்புகளுடன்!

திராவிட முன்னேற்றக் கழகம், 'அம்பலம்' ஏறி ஆச்சாரியார் தமது 'மேதை'யைக் காட்ட முன்வருவதை, வரவேற்றுக் கொள்ளும்!

பேசட்டும், பேசட்டும்—மக்கள் மன்றத்திலே பேசட்டும்—நாமும் பேசுவோம்—நாடு அவருடைய திட்டத்தின் நயவஞ்சகத்தை அறிந்து கொள்ள வழி ஏற்படுமே என்று எண்ணி, தி. மு. கழகம் மகிழ்கிறது.

நீண்டதோர் அறிக்கையில் ஆச்சாரியார், தீர்த்துக்கட்டப்பட்ட தமது திட்டத்துக்குத் தாமே திருப்பல்லாண்டு பாடுகிருரே தவிர, அதைத் தீர்த்துக்கட்டிய காமராசர் மந்திரி சபையைக் கண்டிக்கும் துணிவு கொள்ளவில்லை!

"ஆனுல், காமராஜரிடம் கைவரிசை காட்ட, இந்த அறிக்கைதான். துவக்கமோ என்று சந்தேகிக்க இடம் இருக்கிறது."

சென்னையில் ஏற்கனவே ஆச்சாரியாரின் அடியார்கள், காமராசரின் சார்பானவர்களின் கூட்டத்தில் கலகம் விளைவித்திருக்கிருர்கள்.

ஆகவே, திட்டம் தீட்டிக் கொண்டு வேலையில் இறங்குகிருரோ என்று சந்தேகிக்க வேண்டி இருக்கிறது.

எப்போது அழைத்தாலும் தன் பக்கம் வந்து நிற்கக் கூடியவர்கள் சிலர், சட்ட சபையிலும், மந்திரி சபையிலும் இருப்பது ஆச்சாரியாருக்குத் தெரியும்.

அந்தத் துணையை நம்பி, எதிர்ப்பு வேலை செய்து, காமராசரைக் கவிழ்க்க எண்ணுகிருரோ என்று சந்தேகிக்க வேண்டியிருக்கிறது.

தோல்வியால் ஏற்பட்ட வேதனையும், வெட்கமும்தான் ஆச்சாரியார் அறிக்கையில் தெரிகிறது; தெளிவு எதும் காணும். பேசிப் பேசிப் புளித்துப்போன வாதங்கள் மலிந்தது, அறிக்கை! இடையிடையே, தம்மைத் தவிர மற்றவர் எல்லாம் 'மட்டம்', என்ற மமதை மனப்போக்கு தெரிகிறது.

இந்த அறிக்கை மூலம், ஆச்சாரியார், 'பதவி பிடிக்கும் காரியத்தைக் கைவிட்டுவிடவில்லை,' என்று தெரிவிக்கிருர். காமராசருக்கு எதிர்ப்பு மூட்ட, இந்தக் கைங்கரியத்தைத் துவக்கி இருக்கிருர், என்பது புலனுகிறது!

## தனிநாடு கோரிக்கை

### நாகர்கள் கைவிடவில்லை

★

"நாகர்கள் தங்கள் தனி நாடு கோரிக்கையைக் கைவிட்டனர்," என்று பத்திரிகைகளில் வெளியான செய்தியை நாகர்கள் கவுன்சில் மறுத்திருக்கிறது.

இப்போதும் சரி, அல்லது எப்போதும் சரி, நாகர்கள் தங்கள் தனி நாடு கோரிக்கையைக் கைவிடமாட்டார்கள் என்றும், அதற்காகப் போராடுவோர்கள் என்றும் நாகர்கள் கவுன்சிலின் அறிக்கை ஒன்று கூறுகிறது.

## இலங்கை இந்தியர் பிரச்சினை

### "சென்னையின் கருத்துக் கேட்கப்படவில்லை"

### முதல் அமைச்சர் காமராசர் தகவல்

சென்னை, ஜூன் 9—

"நாடற்ற இந்திய வம்சாவளியினருக்கு இலங்கை சர்க்கார் அரிசி ரேஷனும், வேலை வசதியும் மறுக்க உத்தேசித்திருப்பது குறித்து சென்னை சர்க்காரின் கருத்து இதுவரை டில்லியிலிருந்து கோரப்படவில்லை,"

—என்று சென்னை முதல் அமைச்சர் கே. காமராசர் நிருபர்களிடம் கூறினுர்.

"இலங்கை இந்தியர் பற்றி சென்னை சட்டசபை நிறைவேற்றிய தீர்மானத்துக்கு டில்லியிலிருந்து பதில் வந்ததா?" என்று கேட்டபோது, "இம்மாதிரியான செய்திகளை இந்திய சர்க்காரே கவனித்து நடவடிக்கை எடுக்கு மாதலால், பதில் ஒன்றும் எதிர்பார்ப்பதற்கில்லை," என்று அவர் கூறினுர்.

## ஐந்தாண்டுத் திட்டம் தோல்வி

### மக்களை மதியாத திட்டம் என்கிருர் கிருபளானி!

"இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டம் தோல்வியடைந்து விட்டது; அது மட்டுமல்ல; கடந்த மூன்ருண்டு காலமாக நாட்டில் வேலையிலாத் திண்டாட்டம் அதிகரித்து விட்டது,"

என்று, இந்தூரில் நடைபெற்ற பிரஜா-சோஷலிஸ்டு பொதுக் குழுவில் பேசும்போது ஆச்சார்ய கிருபளானி கூறினுர்.

"இந்த ஐந்தாண்டுத் திட்டம் மக்களை அலட்சியம் செய்து தயாரிக்கப்பட்டது; விவசாயத்துடன் ஒத்துழைக்காத முறையில் தயாரிக்கப்பட்டது,"

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## நெல்லை மாவட்ட — தி. மு. கழக உறுப்பினர்க்கு

★

திராவிட முன்னேற்றக் கழகத்தின் நெல்லை மாவட்டக் கிளை உறுப்பினர்களைக் கலந்து பேசி, ஆக்க வேலைகளுக்கான சிலபல முடிவுகளை எடுக்க வேண்டியிருப்பதால், நெல்லை மாவட்டக் கழகத்தின் செயலாளர், துணைச் செயலாளர், பொருளாளர், ஏனைய உறுப்பினர்கள் ஆகியோர் இதனையே அழைப்பாகக்கொண்டு, 13—6—54 ஞாயிறன்று காலை முக்கூடலில் கூட வேண்டுகிறேன். உறுப்பினர்கள் அனைவரும் தவருது வருக.

"அறிவகம்", சென்னை 9—6—54

இரா. நெடுஞ்செழியன், துணைச்செயலாளன், தி. மு. கழகம்

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

Best copy available.

# உலக அரங்கில்

**இரங்கூன்:**
ஏராளமான கம்யூனிஸ்டுகளும், கரேனிய கிளர்ச்சிக்காரர்களும் சரண் அடைந்து விட்டனர் என்று சர்க்கார் கூறுகிறது. உட்குழுக்குள் ஏற்பட்ட குழப்பம் காரணமாகவே அவர்கள் சரண் அடைகின்றனராம்.

★

**செய்கோன்:**
தின்—பின்—பூ வீழ்ச்சிக்குக் காரணமான வியட்மின் அருப்புகள் இப்போது ஹானாய்க்கு 37 மைல் தூரத்தில உள்ள சிவப்பு நதிப் பிரதேசத்தை சூழ்ந்து கொண்டனர் என்று தெரிகிறது.

* * *

வியட்நாம் சர்க்காரின் படை திரட்டும் ஏற்பாட்டைக் கண்டித்து வியட்நாம் மாணவர்கள் கிளர்ச்சி செய்கின்றனர்.

★

**ஹாங்காங்:**
காயமடைந்தவர்களைத் திருப்பி அனுப்பவும் அதற்காகப் பேசவும் தயார் என்று கூறி இரண்டு இடங்களைக் குறிப்பிட்டு அங்கே ஆயுதமேதும் இன்றி செஞ்சிலுவைக் கொடியின் கீழ் பேசலாம் என்று வியட்மின அருப்புகள் பிரெஞ்சு சர்க்காருக்கு கூறியுள்ளனர்.

★

**பாரிஸ்:**
உஷார் நடவடிக்கை என்ற பெயரில் பிரெஞ்சுக் கம்யூனிஸ்டு கட்சியின் மத்தியக் கமிட்டியிலிருந்து பலர் நீக்கப்பட்டனர். சென்ற ஏழாண்டு காலத்தில் பிரெஞ்சுக் கம்யூனிஸ்டு கட்சியிலிருந்து 9 00,000 பேர் விலகினார்கள் என்று தெரிகிறது.

★

**கேப்டவுன்:**
இனவாரி வேற்றுமையை ரத்து செய்ய வேண்டுமென்று கோருவோர் அந்த இனப் பிரிவுகளை ஏற்படுத்தியவரையே கண்டிப்பதாகும் என்று டாக்டர் மலான் கூறினார்.

★

**கொலம்பியா:**
பாதுகாப்பு இலாகாவைச் சேர்ந்த சார்லஸ்வில்சன், கொரிய பிரச்சினைக்காக கம்யூனிஸ்டுகளுடன் இரகசியமாகப் பேசத் தயாராக இல்லை என்று கூறினார்.

★

**சிங்கப்பூர்:**
தென் கிழக்கு ஆசியப் பிரச்சினைகள் பற்றி நேருவுடன் நீண்ட நேரம் பேசவேண்டும் என்று ஆஸ்திரேலிய வெளிநாட்டமைச்சர் கேசி கூறினார்.

★

**ஹாலிவுட்:**
கிபூ அய்ர்ஸ் என்ற ஹாலிவுட் நடிகர், தான் எடுக்கப் போகும் மத சம்பந்தமான படமொன்றுக்குத் தேவையான செய்திகளைச் சேகரிக்க உலக முழுமையும் சுற்றுப் பயணம் செய்கிறார்.

★

**கொழும்பு:**
கனடா தேயிலைக் கவுன்சில் என்ற புதிய ஸ்தாபனம் ஒன்று கனடாவில் ஜூன் 17-ம் தேதி ஆரம்பிக்கப்படும். இலங்கை, இந்தியா ஆகிய நாடுகளிலிருந்து தேயிலை ஏற்றுமதி பற்றியும், தேயிலையின் தரம் பற்றியும் இந்த அமைப்பு இரு நாடுகளுக்கும் உதவுமாம்.

★

**மெல்போர்ன்:**
ஆஸ்திரேலிய வியாபார அமைச்சர் ஜான் மெகீவன், அமெரிக்கா மீண்டும் தன் கோதுமை விலையைக் குறைக்கும் என்று கூறினார்.

**கெய்ரோ:**
பிரிட்டன், எகிப்து ஆகிய நாடுகளுக்கிடையே, 'புரய்மி' பாலைவனப் பிரதேசம் பற்றி நிலவும் கருத்து வேற்றுமையைப் போக்க, தான் சமரசம் செய்வதாக சவூதி அரேபியா தெரிவித்திருக்கிறது.

★

**வாஷிங்டன்:**
நீர்மூழ்கிக் குண்டு ஒன்றின் சமீபத்திய தயாரிப்பொன்றை சோவியத் ரஷ்யா உட்பட எல்லா நாடுகளின் பிரதிநிதிகளுக்கிடையே வெடித்துக்காண்பிக்க வேண்டுமென்று அமெரிக்க அணுசக்திக் கமிஷனைச் சேர்ந்த ஒருவர் பேசினார்.

* * *

நேச நாடுகளின் இராணுவக் குழு ஒன்று தென்கிழக்கு ஆசியப் பாதுகாப்பு பற்றி ஆராய்ந்து கொண்டிருக்கிறது. அவர்கள் பாதுகாப்பு இலாகாவிற்கு அறிக்கை ஒன்றைத் தருவார்கள்.

★

**ஹவானா:**
கியூபாவில் வசிக்கும் ரஷ்யர்கள், கம்யூனிஸ்டு நாட்டினர் ஆகியோரின் பெயர்ப் பட்டியல் ஒன்றைத் தயார் செய்யுமாறு கியூபாவின் உள்நாட்டமைச்சர் ஹெர்மிடா உத்தரவிட்டிருக்கிறார்.

★

**ஜினீவா:**
தென் ஆப்பிரிக்காவில் உள்ள தொழிலாளர்கள் நிலைமை பற்றி விசாரணை செய்ய வேண்டும் என்று ஐ. எல் ஓ. ஸ்தாபனத்தை வேண்டி உலக தொழிற் சங்கங்கள் யூனியன் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றியது.

* * *

பாரிஸ் பேச்சில் கலந்து கொண்ட இந்தியப் பிரதிநிதி ஆர். கே. நேரு இந்தியாவுக்குத் திரும்பினார்.

★

**நியூயார்க்:**
ஆப்பிரிக்காவில் வாழும் 140 மில்லியன் மக்கள் இதுவரை பிறரையே நம்பி வாழ்ந்துவந்த நிலைமைபோய் அவர்கள் தங்கள் வாழ்க்கைக்கென்று சுதந்திரமாக பொருள் ஈட்ட ஆரம்பித்து விட்டனர் என்று ஐ. நா. ஆராய்ச்சி நிலையம் தெரிவிக்கிறது.

★

**ஏதென்ஸ்:**
தனது அமெரிக்க சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு அங்காரா செல்லும் வழியில் துருக்கியின் பிரதமர் மெண்டர்ஸ், ஏதன்சில் ஒரு நாள் தங்கி பால்கன் நாடுகளின் ஒப்பந்தம் பற்றிப் பேசுவார்.

★

**பாங்காக்:**
தனது வெளிநாட்டு வியாபாரத்தை அதிகரிக்கும் நோக்குடன் தாய்லாந்து ஏற்றுமதிக் கட்டுப்பாடுகள் அனைத்தையும் ரத்து செய்துவிட்டது. அரிசி விலை குறைந்து போனதால் பொருளாதார நெருக்கடியைத் தவிர்க்க இப்படி ஏற்பாடு செய்யப்படுகிறது.

★

**லண்டன்:**
தொழிற் சங்கத்தினைச் சேர்ந்த நிக்கோலி, ஷெர்பிக், என்று சோவியத அமைச்சர்கள் சரியான முறையில் திட்டங்களை நிறைவேற்றவில்லை என்று குற்றம் சாட்டினார் என்று மாஸ்கோ ரேடியோ தெரிவித்தது.

* * *

கிழக்கு ஜெர்மனியில் 13-லிருந்து 20 சதவிகிதம் அளவில் விலை குறைவு ஏற்பட்டிருக்கிறது என்று தெரிகிறது.

## கழகக் கூட்டம்

★

### சேவூர் (வ. ஆ)

**தி. மு. கழக 4-ம் ஆண்டு நிறைவு விழா**
லால்குடி நடராசன் அரங்கில் (குளக்கரை எதிரில்)
11—6—54 மாலை 6 மணிக்கு
**தலைவர்:**
போளூர் கே. சுப்ரமண்யம்
அலங்குபவர்: அருண்மொழி
**பேசுவோர்:**
என். வி. நடராசன்
கண்ணதாசன்
ஏ. எல். சி. கிருஷ்ணசாமி

இரவு 10 மணிக்கு செங்காடு செந்தமிழ் மன்றத்தாரால் 'அன்பின் வெற்றி' நாடகமும் நடைபெறும்.

### போஸ்டல் தொழிலாளர் கழகம்

அகில இந்திய போஸ்டல், ஆர் எம். எஸ். தொழிலாளர் கழக சென்னைப் பிரிவின் கூட்டமொன்று சென்னை கோகலே மண்டபத்தில் 10—6—54 மாலை 6-30 மணிக்கு; போஸ்டல் சர்வீசுகளின் உதவி டைரக்டர் ஆர். சுப்பிரமணியம் தலைமையில நடைபெறும். வழக்கறிஞர் வி முனுசாமி சொற்பொழிவாற்றுவார்.

### மூஞ்சூர்

**அண்ணா படிப்பகம்**
11—6—54 இரவு 7 மணிக்கு மூஞ்சூர், கீழ வீதியில, தோழர் எஸ். சீதாராம் தலைமையில் மேற்படி படிப்பகத்தின் சார்பில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெறும். தோழர் க. அன்பழகன் பேசுவார்.

## திருமணங்கள்

11—6—54 காலை 9 மணிக்கு திண்டுக்கல்லில் தோழர் சுந்தரராசனுக்கும்—தோழியர் வெள்ளையம்மாளுக்கும் சீர்திருத்தத் திருமணம் தோழர் சி. உலகநாத(பிள்ளை) தலைமையில் நடைபெறும். தோழர்கள் இளமுருகு, என். முத்து, தோழியர் பொற்செல்வி ஆகியோர் பேசுவர்.

* * *

11—6—54 காலை 9 மணிக்கு சேவூரில் தோழர் கண்ணதாசன் தலைமையில் சேவூர் (வ. ஆ) தி. மு கழகச் செயலர் தோழர் வி. இ. செயராமனுக்கும், தோழியர் இரத்தினத்திற்கும் திருமணம் நடைபெறும். மணமக்களைப் பாராட்டி தோழர்கள் என். வி நடராசன், ஏ எல். சி. கிருட்டிணசாமி, போளூர் கே. சுபரமணியம், தோழியர் அருண்மொழி ஆகியோர் பேசுவர்.

* * *

11—6—54 காலை 7 மணிக்கு தோழர் என். வி. நடராசன தலைமையில் சேவூர் (வ. ஆ) தி. மு கழக செயற்குழு உறுப்பினர் தோழர் ஆர். கோபாலுக்கும் தோழியர் விசாலாட்சிக்கும் திருமணம நடைபெறும்.

## ஈ. வெ. கி. சம்பத், எஸ். அப்பாவு

### சுற்றுப்பயணம்

ஜூன் 11: காட்டுப்புத்தூர்
காலை: திருமணம்;
மாலை: பொதுக் கூட்டம்
12: மேட்டுப்பாளையம் (திருச்சி)
13: உறையூர்
18: மாரண்டஹள்ளி (சேலம்)
22: ஏனங்குடி
23: அம்மையப்பன்
25: முத்துப்பேட்டை
26: குருவிகரம்பை
27: நீடாமங்கலம்
28: திருச்சினம்பூண்டி

## கோயில் பணத்தை கல்விக்குச் செலவிடக் கூடாதாம்!

### மீனாட்சிசுந்தரனாரின் முடக்குவாதம்!

"கோவில்களின் வருமானத்தை கல்விச் சாலைகளுக்காகச் செலவிடுவது தவறாகும்; வேறு எந்த மதத்திற்கும் சட்டம் இல்லாத போது இந்து மதத்திற்கு மட்டும் சட்டமியற்றுவது சரியல்ல"

என்று தமிழ்நாடு அருள் நெறி திருக்கூட்டத்தின் பொதுக் காரியதரிசியான ஈரோடு மீனாட்சி சுந்தரம் அவர்கள் சேலம் ஜில்லா அருள்நெறி திருக்கூட்டத்தை ஆரம்பித்து வைத்துப் பேசுகையில் கூறினார்.

"மத நம்பிக்கையை மீண்டும் நாட்டிலே உண்டாக்கவும், கடவுள்மீது பக்தியை வளர்க்கவும், கருஞ்சட்டையினர்—நாஸ்திகர்கள் பிரச்சாரத்திற்கு எதிர்ப் பிரச்சாரம் செய்யவும் அருள் நெறித் திருக்கூட்டம் பாடுபடுகிறது,"

என்று அவர் மேலும் கூறினாராம்.

சென்னை முதல் அமைச்சர் கே. காமராஜ் அவர்களைச் சந்தித்து இந்து மதத்தை புதுப்பிக்கும் முறைகளைக் கையாள வேண்டுமென்று தான் கேட்டதாக அவர் கூறினார்.

## அலகாபாத்தில் கடையடைப்பு

### மின்சார வரிக்கு எதிர்ப்பு

பி-சோஷலிஸ்டுகள் கிளர்ச்சி

புதிதாக உத்திர பிரதேச சர்க்கார் விதித்திருக்கும் மின்சார வரியை எதிர்த்து அலகாபாத் நகர் முழுமையும் கடையடைப்பு நடைபெற்றது.

பிரஜா-சோஷலிஸ்டுகள் நடத்திய கடையடைப்பு வெற்றிகரமாக நடைபெற்றதாம்.

இரவு 7-மணி முதல் 9-மணி வரையில் நகரின் பெரும்பான்மையான வீடுகளில் மின்சார விளக்குகள் ஏற்றப்படவில்லை.

மின்சார வரி விதிப்பை ஒட்டி நடைபெறும் இந்தக் கடையடைப்பு பிரஜா-சோஷலிஸ்டுகளின் இரண்டாவது எதிர்ப்பு ஆர்ப்பாட்டமாகும்.

மாலையில் நடைபெற்ற மிகப் பெரிய ஊர்வலமொன்றில் ஏராளமாகப் பெண்களும் கலந்து கொண்டனர். ஊர்வலத்தின் முடிவில் நடைபெற்ற கூட்டமொன்றில் மின்சார வரியை உ. பி சர்க்கார் உடனே ரத்து செய்யவேண்டுமென்ற தீர்மானம் ஒன்று நிறைவேறியது.

### மலேரியா

மலேரியா வாரத்தை ஒட்டிப் பேசுகையில் இந்திய சுகாதார அமைச்சர் திருமதி அமிருதகௌர் மலேரியாவை ஒழிப்பதில் சர்க்காருடன் ஒத்துழைக்குமாறு நாட்டு மக்களைக் கேட்டுக்கொண்டார்.

---

நிதி அமைச்சர் தேஷ்முக்கும் அவர் மனைவி திருமதி துர்காபாயும் சென்னையின் முன்னாள் அமைச்சர் ஆச்சாரியாரை அவர் வீட்டில் சந்தித்தனர்.

### சொற் பயிற்சி வகுப்பு

11—6—54 மாலை 6 மணிக்கு நாகை தி மு கழகக் கட்டிடத்தில் அழகிரி சொற் பயிற்சி மன்றத்தின் சார்பில் தோழர் இரா. ஜெயச்சந்திரன் தலைமையில், 'சமுதாயத் துறையில் தி மு கழகம்' எனும் பொருள் பற்றி பேச்சுப் பயிற்சி வகுப்பு நடைபெறும்.

## செய்திக்கதிர்

**பயங்கர ஆட்சி**
கிழக்கு வங்கத்தில் அதிகாரிகள் பயங்கர ஆட்சி நடத்துவதாகப் பல்வேறு ஜில்லாக்களிலிருந்து செய்திகள் வருகின்றன.

★

**குறைகள்**
இம்பீரியல் பாங்கி, இந்தியன் பாங்கி, இந்தியன் ஓவர்சீஸ் பாங்கி ஆகியவைகளின் சார்பில், தோழர் நாகையா தலைமையில் தூதுக்குழு ஒன்று வி.வி. கிரியைச் சந்தித்து, குறைகள் அடங்கிய மகஜர் ஒன்றைச் சமர்ப்பித்தது.

★

**செயற்கை பெட்ரோல்**
செயற்கை முறையில் எண்ணெய் உற்பத்தியைப் பரிசீலனை செய்ய நியமிக்கப்பட்ட ஆலோசனைக் கமிட்டி ஸ்ரீநகரில் கூடியது. ஆண்டொன்றுக்கு 3-லட்சம் டன் வரையில் எண்ணெய் உற்பத்தி செய்யப்படுமாம்.

★

**நஷ்டம்**
சமீபத்தில்பம்பாயில் ஏற்பட்ட ரயில் விபத்தில் ரூ. 46,000 நஷ்டம் ஏற்பட்டதாக பிராந்திய ரயில்வே பொதுஉறவு அதிகாரி கூறினார்.

★

**சமாதான காங்கிரஸ்**
காங்கிரஸ்காரர்கள், உலக சமாதான காங்கிரசுடன் எவ்வித உறவும் வைத்துக் கொள்ளக்கூடாது என்று சுற்றறிக்கை ஒன்று அனுப்பப்பட்டிருக்கிறது. நேருவே இந்த சுற்றறிக்கையை அனுப்பினாராம்.

★

**மதுவிலக்கு**
டில்லி ராஜ்யத்தில் மதுவிலக்குக் கொள்கையைப் பரிசீலனை செய்யக் கமிட்டி ஒன்று நியமிக்கப்பட்டிருக்கிறது.

★

**ஒத்திவைப்பு**
அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் முடிவு தெரியும் வரையில் நில சீர்திருத்த மசோதாவைக் கொண்டுவர இயலாது என்று சென்னை முதல் அமைச்சர் கே. காமராஜ் கூறினார்.

★

**பல்கலைக் கழகம்**
உஸ்மானியா பல்கலைக் கழகத்தை மத்திய சர்க்கார் ஏற்றுக் கொள்வதை ஒத்திபோடவேண்டும் என்று பல்கலைக் கழக செனட் முடிவு செய்துள்ளது.

★

**வசீகர திட்டம்**
மாணவர்களைக் காங்கிரசில் சேருமாறு வசீகரிக்க பூமிதானம், சம்பத்துதானம் போன்ற திட்டங்களை அவர்கள் முன் வைக்க வேண்டுமென்று காங்கிரஸ் பொதுக் காரியதரிசி அகர்வால் திரு—வொச்சி காங்கிரஸ்காரர்களிடையே பேசுகையில் கூறினார்.

★

**தூதுக் குழு**
சேலம் நகரசபையின் சார்பில் நகர சபைத் தலைவர் இராமலிங்கம், நகரசபை உறுப்பினர் ஏ. மாரியப்பன் ஆகியோர் கொண்ட தூதுக்குழு ஒன்று சென்னை முதலமைச்சரைச் சந்தித்து சேலம் நகர தண்ணீர் திட்டத்திற்கு பொருளாதார உதவி குறித்துப் பேசினர்.

---

[illegible] முன்னேற்றக் கழகத் [illegible] தோழர் இரா.செழியன் [illegible] அழகிரி அச்சகத்தில் [illegible] (26, [illegible] நாராயண செட்டித் தெரு, [illegible]) வெளியிடப்படுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை, எம். ஏ.

Best copy available.

